# மனப்பேய்

யோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார்







சுத்தானந்த நிலையம்

# மனப்பேய்

யோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார்








சுத்தானந்த நிலையம்
புதுக்கோட்டை

6-2



## பதிப்புரை

இது ஓர் அரிய பிரெஞ்சுக் கதை. புகழ் பெற்ற நாவலர் **அநதோல் பிரான்ஸ்** எழுதிய **தைஸ்** என்ற அற்புத நாவலைத் தழுவியது. இதில் ஒரு துறவி கலைச் செல்வியான ஒரு வேசையைத் திருத்தப் புகுகிறார். வேசை திருந்தி, தெய்வபக்தை யாகிறாள்! துறவியோ மனப்பேயிடம் பலமாகச் சிக்கி மன்மத பாணம் தைத்தது.......

அவர் பட்ட பாட்டை நீங்களே படித்துப் பாருங்களேன். மனப்பேயின் குறும்புகளை நீங்களே அறிவீர்கள்.

புதுக்கோட்டை
19—8—1950

சுத்தானந்த நிலையம்



**1. *சாமி :*** காயக்லேசர் ***(பாபிநீசர்)*** கடுந்துறவி. உடலை வருத்தும் வைராகி, மனம் அடங்காதவர்.

**2. *நீஸியன் :*** சாமியாரின் நண்பர். உலகாயதர், போக சுகங்களில் பற்றுடையவர்.

**3. தைஸ் : *(தாயி)*** அழகும் கலையும் மிக்க வேசை. அலெக்ஸாந்திரா மோகினி. விலைவாழ்வையும் கலைவாழ்வையும் துறந்து பக்தி மார்க்கத்தில் ஈடுபட்டுத் திருந்தியவள்.

# மனப்பேய்



## 1. சாமி காயக்கிலேசர்

நைல் நதிக்கரையில் சில வைராகிகள் வசித்தனர். அவர்களுக்கு உலகம் என்றால் பயம். பெண் என்றால் கிலி. பணம் என்றால் நடுக்கம். ஆடையாபரணம் என்றால் அச்சம். ஏன்? இவற்றிலெல்லாம் சைத்தான் புகுந்து தொந்தரவு செய்யுமாம். "ஒன்றும் வேண்டாம் நன்றாகச் சாப்பிடும் சாமி" என்றால்.... "ஐயோ வேண்டாம்; வறட்டு ரொட்டியும் தண்ணீரும் போதும்" என்பர். ஏன்? நன்றாகச் சாப்பிட்டால் நாக்கு தடிப்பேறும், உடம்பில் சதையேறும், கொழுப்பேறும், அறிவு மயங்கும்....சாத்தான் உள்ளே புகுந்து கண்ணி வைப்பான். மனப்பேயைத் தூண்டுவான்; அது பொல்லாதது.

இப்படிப்பட்ட வைராகிகளுக்குத் தலைவர் அதோ இருக்கும் பாபிநீசர். பாபிநீசர் அலெக்ஸாந்திராவில் பிறந்தவர், கல்லூரியில் படித்துப் பட்டம் பெற்றவர். சொல்வன்மை மிக்கவர். வாலிபத்தில் மனம்போனபடி தமாஷாகத் திரிந்தவர். ஆனால் ஏசுநாதரிடம் அன்புமிக்கவர். "உனது பொருளெல்லாம் ஏழைகளுக்குத் தந்து, வா பின்னே ............ நாளைக்கவலையேன்? புட்களைக்காக்கும் இறைவன் உன்னையும் காப்பான்." என்னும் திருவாக்குகள் பாபிநீசனைக் கவர்ந்தன. ஒரு துறவியின் ஞானோபதேசமும் கிடைத்தது. பாபிநீசன் பட்டம், பதவி, பணம், சொத்து, சுகம், வீடு எல்லாவற்றையும் துறந்து, நைல் நதிக்கரையில் வைராகிகளுடன் வைராகியாக வசித்தான். வறண்டு போன ரொட்டி, தண்ணீர் இவையே அவன் உணவு.

மணலே படுக்கை; ஜபமே தொழில். தனது வாலிப சேஷ்டைகளையும் பாபங்களையும் நினைத்து 'ஹோ' என்று பாபிநீசன் அழுதான். மன்னிப்புக் கேட்டுக் கடவுளைத் தொழுதான். ஏசுநாதர் சிலுவையில் பட்ட துயரெல்லாம் தானும் படவேண்டுமென்று, தனக்கே சவுக்கடி கொடுத்தான். பிச்சையெடுக்கப் போகும்போது ஜனங்கள் செய்யும் கேலி நையாண்டிகளையும் பொறுத்தான். துறவிகளுக்கு நிதம் பைபிள் உபதேசம் செய்தான். பாபிகளைக் கரையேற்றப் பாடுபட்டான். அவரது கொடிய விரதங்களைக் கண்டு அவருக்குக் காயக்கிலேசர் என்ற பெயர் வந்தது.

இவ்வளவு காயக்கிலேசம் செய்தும் சாமியார் மனம் அடங்கவில்லை. அது ஒரு தாசியிடம் சென்று கொண்டிருந்தது. அவள் பெயர் தாயி. சாமியார் உல்லாச வயதில் அவளைப் பார்த்ததுண்டு. அவள் அலெக்ஸாந்திராவின் மோகினி. "பரம பிதாவே உனது அரசு வருக." என்று சாமியார் தொழும்போதே, தாயி முன்னே புன்னகை புரிந்து "ஜிலு ஜிலு" வென்று நிற்பாள். "ஐயோ பரம பிதாவே இந்தக் காமராக்ஷஸியை விரட்டியடியுமே" என்று சாமியார் குப்புற விழுந்து அழுவார். அப்போது அவர் மனமாளிகையில் ஏறிக் கலகலவென்று தாயி நகைப்பாள். 'ஜய கிறிஸ்து' என்று ஜபம் பண்ணும்போதே தாயி அவர் சிந்தையில் லாஸ்ய நடனம் புரிவாள். இந்த இழவுக்கு என்ன செய்வது? சாமியார் கிள்ளிக்கொள்வார், அடித்துக்கொள்வார், பட்டினி யிருப்பார், தெய்வத்திற்கு அழுவார். தாயி நினைப்புமட்டும் போவதில்லை. அலெக்சாந்திராவின் மோகினிப்பேய், தாயி. 'இந்த வேசை மூலம் ஜனங்கள் எல்லாருக்கும் சைத்தான் பிடித்தாட்டுகிறது. அதே சைத்தானே நம்மையும் வந்து சோதிக்கிறான். ஆதலால் இந்த வேசையைத் திருத்தி ஒரு கன்னி மடத்தில் சேர்த்தால், ஊர் திருந்தும் நாடு திருந்தும், கிறிஸ்து ராஜ்யம் வந்து குதிக்கும். இதோ

இப்போதே செல்கிறேன்...' என்று சாமியார் புறப்பட்டார். "போம் போம் அவள் வலையில் சிக்கிச் சீரழியப்போகிறீர்" என்று சில துறவிகள் எச்சரிக்கை செய்தனர்.

## 2. நண்பர் நீஸியன்

ஆற்றோரமாகக் காடுமேடெல்லாம் கால் தேய நடந்து, சாமியார் அலெக்ஸாந்திரா வந்து சேர்ந்தார். அவர் கோலத்தைக்கண்டு 'குரங்கே, கருங்குரங்கே டேய், டேய்' என்று சிறுவர் கேலிசெய்தனர், கல் எறிந்தனர். சிலர் பூச்சாண்டிடோய் என்று பயந்தோடினர். சிலுவையின் பெயரால் எல்லாம் பொறுத்து, சாமியார் தமது பள்ளித் தோழனை ஒரு செல்வன் மாளிகைக்குச் சென்றார். அந்த நண்பரே நீஸியன். அவன் மெத்தப் படித்தவன். வாயில் அரிஸ்டாடிலும் பிளேடோவும் தவழும். நடத்தை வழவழா.....காமப் பித்தன், செல்வச் செருக்கன், களிப்புலவன். ஆனால் நண்பரை நன்றாக உபசரிப்பான். நீஸியன் தனது பழைய தோழனுடைய அலங்கோலத்தைக் கண்டு பரிதபித்தான். தனது தாசிகளை அவனுக்குத் தைல மாட்டச் சொன்னான்.

**சாமியார் :** ஐயோ நண்பா...வேண்டாம் பெண்கள்.! சைத்தான் பிடித்துக் கொள்வான் ....

**நீஸியன் :** அட பைத்தியமே....உன் முகமோ கந்தையோ! இந்த நாகரிகபுரியில் கல்லடிபட்டுச் சாகாதே. பேசாமல் இரு. இளம்பெண்கள் உன்னைத் தைலமாட்டி அலங்கரிக்கட்டும் .......... மாப்பிள்ளை போலிருக்கலாம் ....

**சாமியார் :** ஐயையோ, நண்பா வேண்டாம்... பெண் சைத்தான் கிட்ட வரக்கூடாது. நான் ஒரு பெண்ணைத் திருத்தி நித்திய வாழ்வு தரவே வந்தேன்....

**நீஸியன் :** எந்தப் பெண்ணை நீ திருத்தப் போகிறாய்....

**சாமியார் :** நண்பா, இந்த ஊரில் தாயி என்ற நடனமாது இருக்கிருள். அவள் அழகில் சைத்தான் புகுந்திருக்கிறுன். ஐயோ, அவளால் வாலிபர்கள் கெடுகிருர்கள். கனதனவான்கள் அவளடியில் பணத்தையும் கொட்டிப் பாபத்தையும் சுமக்கிருர் கள். அவள் ஆடல் பாடல் அழகு எல்லாம் ஜனங் கள் மூளையைப் பாழ்படுத்துகின்றன. அவளை அடியோடு திருத்திருலே ஊர் உருப்படும், கிறிஸ்து ராஜ்யம் வரும்.

**நீஸியன் :** நண்பா, அழகுத் தெய்வத்திற்கு அபராதம் செய்யாதே. அது பழிவாங்கும். கவனம்.... தாயி கலையின் அவதாரம், அழகின் சுடர். அவளால் ஊர் களை நிறைந்திருக்கிறது. அவள் பாட்டும் நடிப்பும் வாழ்வுக்கு இன்பமளிக்கின்றன. அவளது ஆலிங்கனத்தால் எத்தனையோ பேருக்கு மகிழ்ச்சி யுண்டாகிறது. அவளால் எத்தனையோ வணிகர் பிழைக்கிருர்கள், கலைகள் வளர்கின்றன. அவள்மேல் எத்தனையோ புலவர் கவி பாடி யிருக்கிருர்கள். அவளே பிரத்யட்சமான சுவர்க்கம். பைத்தியக்கார நண்பா, அவள் பக்கம் போகாதே.... காமதேவதை உன்னைப் பழிவாங்கும். .... அவள் தரும் இன்பத்தில் மயங்கியவருள் நானும் ஒருவன். அவள் எனக்கும் தாசி. .... ....

**சாமியார் :** அட பாவி .... .... காதில் நாராசம் பாய்ச்சினுயே! அவள் உனது தாஸியா .... ... நீயும் அந்தப் பாபக் கிடங்கில் விழுந்தாயா?. சை உன் முகத்தில் விழிக்கக் கூடாது. தயவு செய்து நான் வேண்டுவதைத் தா; போகிறேன்.

**நீஸியன் :** நன்ருகச் சம்பாதிக்க வேண்டும்; சுகபோகங்களை அனுபவிக்க வேண்டும். இது என் கொள்கை. போ, போ, உன்னைப் பேய் பிடிக்கப் போகிறது ... காமப்பேய் .... உன் காயக்கிலேச மெல்லாம் தாயியிடம் பலிக்காது .... ... .

சாமியார் ஒரு அழகான பட்டுடை வாங்கியணிந் தார். கையில் ஒரு பணமுடிப்பு வாங்கிக்கொண்டார். மைனர் காளைபோலக் கிளம்பினார். .... ....

## 3. தாயி நடனம்

சாமியார் அலெக்சாந்திரா தெருக்களில் சுற்றித் திரிந்தார். ஜனங்கள் கூட்டங்கூட்டமாக எங்கோ சென்றனர். சாமியார் விசாரித்தார். 'இது தெரி யாதா; இன்று தாயி நாடகம்' என்று எல்லாரும் ஓடி னார். சாமியார் அவர்களுடன் போட்டி போட்டு ஓடி நாடகக் கொட்டையில் புகுந்து மதிப்பான இடத்தில் அமர்ந்தார். அன்று ஹோமரின் 'இலியாது' காவி யத்திலிருந்து எடுத்த ஒரு அரிய நாடகம் நடை பெற்றது. தாயி நாடகத் தலைவியாக நடித்தாள். அவள்மேடைமேல் வந்ததும் சபை முழுதும் "அழகுத் தெய்வத்திற்கு ஜேய் .... தாயிக்கு ஜேய்" என்று ஆர் கலித்தது. என்ன தளுக்கு, மினுக்கு, ஒய்யாரம், மீன்விழி, முல்லைச் சிரிப்பு, மதி முகம், மயில் போலச் சாயல், குயில்போலக் குரல், நடன சிங்காரி, மேடை யரசி, அழகு ராணி ... தாயி வாழ்க என்று சபை முழு தும் குதூகலித்தது. நமது சாமியார்கூட அவளது மோகனாஸ்திரத்தில் கட்டுப்பட்டு ... அங்க விசார ணைக்கு ஆரம்பித்து விட்டார். பிறகு 'சட் சைத்தான்! என்னையா பதம் பார்க்கிறாய்? இதோ பரமபிதாவைக் கொண்டு உன்னைச் செருப்பால் அடித்து ஓட்டு கிறேன்" என்று கண்ணை மூடினார். சூறாவளியில் ஆடிமேகம் போல், தாயி கிண் கிணி நடனத்தில் அவர் தியானம் சிதறிப்போனது. பிறகு முணுமுணுத் தார்: "பரமபிதாவே, இந்தப்பேய் என்னைப் பிடிக்கா மல் அருளும். இவளைக் கண்டாலே சித்தம் கலங்கு கிறது. நெஞ்சில் என்னமோ செய்கிறது. அதைத் தீரும். இந்தப் பாப ஜன்மத்தை விட்டு இவள் உனது காதலியாக வாழ அருளும் ... பிதாவே வணக்கம். ஏசுவே வணக்கம்."

நாடகம் முடிந்ததும் கும்பலில் இடித்துப் புகுந்து தப்பி சாமியார் தாயி மாளிகைக்கு வந்தார். அவரது ஆடையும் ரொக்கமும் கண்டு வாசலைக் காத்த பெண்மணி உள்ளே வரவேற்றாள்.

அச்சமயம் தாயி தனது வாழ்வின் சீர்கேட்டைப் பற்றிச் சிந்தித்துக்கொண்டிருந்தாள். நாமும் அவளது பூர்வோத்தரங்களை அறிவோம்.

## 4. சாது தியோடர்

தாயி அலெக்சாந்திராவில் பிறந்தவள். பெற்றோர் பரம ஏழைகள்; சாப்பாட்டுக்கடை வைத்துப் பிழைத்தனர்; தாயார் பெரிய லண்டி. அவள் மகளைக் கவனிப்பதே யில்லை. தாயி அனாதைபோல் வளர்ந்தாள். கடைக்கு வரும் குடிகாரரிடமும் சிப்பாய்களிடமும் கொஞ்சிக்குலாவி, அவர்கள் விருப்பங்களுக்கிணங்கி, தினம் ஒரணா இரண்டு அணா சம்பாதித்து, ஒரு கிழவியிடம் ஆப்பம் வாங்கிச் சாப்பிட்டு வந்தாள். குடிகாரர் போதையில் செய்யும் ரகளையைக் கண்டு தாயி மனம் துடிப்பாள். அவளுக்குப் பிரியமானவன் ஒரு நீக்ரோ ஏழை. அவன் அந்தக்கிளப்பில் அடிமைத் தொழில் செய்பவன். அவன் தாயியைத் தனது சொந்தக் குழந்தை போலப் பேணினான். பெற்றோர் காட்டாத அன்பைக் காட்டினான். அவன் பெயர் அகம்ஸா. அவன் தீவிரமான கிறிஸ்து பக்தன், சத்தியவான், மனவிசாலன். அடித்தாலும் வைதாலும் கலங்கமாட்டான். எப்போதும் ஏசுநாதரையே உள்ளே துதிப்பான். அக்காலம் ஆண்ட கொடுங்கோலன், கிறிஸ்து விரோதியாயிருந்தான். சர்ச்சுகளை இடித்தான்; அடியார்களைக் கொன்றான்; எங்கும் அடக்குமுறை. ஆதலால் உண்மையான கிறிஸ்து பக்தர் ஊர் அடங்கியபின் இரவில் ஒரு வீட்டில் கூடித் தொழுது வந்தனர். அடிமை அகம்ஸா ஒவ்வொருஇரவும் தொழுகைக்குச் சென்று வருவான். தாயிக்கு ஏழு வயதானதும் ஏசுநாதரைப்பற்றிச் சொல்லி அவளுக்குக் கிறிஸ்து

மார்க்கத்தில் ஒரு ஆவலை உண்டாக்கினன். தாயி, தானும் ஞானஸ்நானம் பெற விரும்பினள். ஒரு இரவில் அவன் தனது உபதேசியாரிடம் கொண்டு சென்று அவளுக்கு ஞானஸ்நானம் செய்வித்தான். உபதேசியார் அகம்ஸாவிடம் பெருமதிப்புள்ளவர். அவனது உண்மை யொழுக்கத்தைக் கண்டு "சாது தியோடர்" என்னும் திருநாமம் சூட்டினவர். தியோடர் தாயிக்குக் கிறிஸ்து தருமத்தை உபதேசித்து வந்தான். அவனே அவளுக்கு உலகம், உற்ருர், பெற்ருர்.

அரசாங்கம் மாறியது. கிறிஸ்துவருக்கு அச்சம் ஒழிந்தது. தியோடர் காலை மாலை ஊரெங்கும் சுற்றி "ஏசுநாதரையே நம்புங்கள். வானரசு வரப் போகிறது. செல்வச்செருக்கு மண்ணைக் கௌவும். எளியவர் மகிழ்வர். அடிமைகள் விடுதலையாவார்கள். கொடுமை ஒழியும், கடவுள் கருணையை நம்புங்கள்" என்று பிரசங்கம் செய்தான். ஏழைகளுக்கு ஆறுதல் சொன்னன். ஏழைக் கிறிஸ்துவர் அவனை வாழ்த்தினர். செல்வர் "இரு பயலே" என்று பல்லைக்கடித்தனர். ஒருநாள் சாப்பாட்டுக் கடையில் ஒரு வெள்ளிப்பாத்திரம் களவுபோனது. தியோடர் மேல் பழிசுமத்தி நீதிபதிகள் முன் விசாரணை நடத்தினர் தாயியின் பெற்ரோர். தியோடர் தனது நியாயத்தை எடுத்துக் கூறினன். ஏழை சொல் அம்பலமேறவில்லை. சிலுவையடியாளுதலால் அவனைச் சிலுவையில் வைத்துக் கைகளுக்கு ஆணியடித்துச் சித்திரவதை செய்தனர். தியோடர் பரமபிதா திருநாமத்தைச் சொல்லிக்கொண்டே நான்கு நாள் கழித்து "இதோ தேவதூதர் வந்தனர். என்னைப் பரமபிதாவிடம் அழைத்துச் செல்கின்றனர். ஆ, அப்பா! ... ஏசு .... ஆமன்" என்று உயிர் நீத்தான். அவன் உடலைக் கிறிஸ்துவர் வாங்கிச் சென்று சமாது வைத்து வணங்கினர். அடிமை அகம்ஸாவின் புதைகுழி சாது தியோடர் சமாதியாக விளங்கியது.

## 5. வேசைத் தொழில்

தன்மேல் அன்பாயிருந்த ஒரு பிராணியும் போன பிறகு, தாயியின் நிலைமை மோசமானது. பெற்றோர் அவளைக் கவனிக்கவில்லை. சும்மா வேலையேவி அடித்தனர். அவள் தெருவில் போவோரிட மெல்லாம் பிச்சை கேட்டு வயிறு வளர்த்தாள். ஒரு நாள் வீட்டுக் கொடுமை தாங்காமல் சிறு பெண் கோட்டைச் சுவர் மூலையில் தனியே ஒளிந்திருந்து கவலை மிஞ்சி அழுதாள். அப்போது ஒரு கிழவி வந்து "அடி என் அழகுமலரே........வா என்னோடு உன்னை ராஜாத்தி மாதிரி வைத்துக் கொள்ளுகிறேன்" என்று வேறு ஊருக்கு அழைத்துச் சென்றாள். அவளே மோரே என்னும் வேசை. அவள் இப்படி அனாதைக் குழந்தைகளைக் கைப்பற்றி ஆடல்பாடல் சொல்லிவைத்துச் செல்வரிடம் விட்டுப் பணம் தட்டுவதுண்டு. கிழவி தாயிக்கும் ஆடல்பாடல் கற்பித்தாள். தாயி வயதாக ஆகக் காலை ரோஜா மாதிரி அழகிற் சிறந்தாள். ஊரில் நடக்கும் செல்வர் விருந்துகளில் ஆடிப்பாடிப் புகழ் பெற்றாள். மைனர் காளைகள் பலர் அவள் வலையில் விழுந்தனர். அவருள் லோலியஸ் என்னும் பெருஞ்செல்வ வாலிபன், அவளை ஆறுமாதம் உயிர்போலக் காதலித்து அரசிபோல நடத்தினான். பிறகு கைவிட்டு இன்னொருவள் மோகத்தில் ஆழ்ந்தான். அதுமுதல் தாயி எவனையும் கணவனாகக் கருதவில்லை. தனது உடலைப் பெருஞ் செல்வருக்கு விற்று ஏராளமான சொத்துச் சேர்த்தாள். ஆடல் பாடல்களால் புகழ் பெற்றாள். ஒருதரம் அலெக்சாந்திரியாவில் கச்சேரி நடத்தினாள். அந்த ஊரார் அவளைப் போற்றிப் புகழ்ந்து கலாதேவியாகக் கொண்டாடினார்கள். விளக்குப்பூச்சிபோல் அவள் அழகில் பல செல்வக் காளையர் மயங்கினர். தாயி அலெக்சாந்திரியாவிலேயே பெரிய உல்லாச மாளிகை அமைத்துத் தொழில் நடத்தினாள். அவள் மாளிகை சலவைக்கல் வேலை செய்தது. அதில் அழகிய பெண் பதுமைகள் இருந்தன. அது இந்திர லோகம்போலிருந்தது. உள்ளே போனால் இந்திரபோகந்தான் .... மாளிகை

யைச் சுற்றி அழகான உபவனங்கள் செழித்திருந்தன. அருகே ஒரு ஓடை சலசலத்தோடியது. .... தாயி உல்லாசமாக உட்கார ஒரு அலங்கார ஊற்றிற்கருகே பளிங்குக் கூடம் இருந்தது. தாயிக்குப் பல அடிமைகள் இருந்தனர். தாஸிகள் பலர் அவள் கட்டளையைச் செய்தனர். செல்வர், அதிகாரிகள், கலைஞர் எல்லாரும் அவள் கைக்குள் இருந்தனர். தாயி இலட்சக் கணக்கில் சம்பாதித்தாள். தினம் ஒரு செல்வரின் அரசியாக வாழ்ந்தாள். யாதும் குறைவில்லை. எனினும் அவளுக்குத் தனது விலை வாழ்வு பிடிக்கவில்லை. மாளிகை பாபநரகமாயிருந்தது. பிறர் தன்னை யணையும்போது அவள் மனச்சாட்சி ஈட்டி போட்டுக் குத்தும். பலர், தேனில் விழுந்த ஈபோல அவள் மையலில் விழுந்து கெட்டனர். ஆனால் அவள் மனம் மட்டும் யாரையும் காதலிக்கவில்லை. பலர் அவள் உடலின்பத்தை அனுபவித்தனர்; அவள் மனோவேதனை அனுபவித்தாள். வரவர வேசைத் தொழில் பிடிக்கவில்லை. அவள் உள்ளம் காமசுகத்தினும் உயர்ந்த ஒரு இன்பத்தை நாடியது. அசுத்த வாழ்வை விட்டுத் தூய சன்மார்க்கத்தை விரும்பியது. அவள் மாறுவேடம் பூண்டு ஊரிலுள்ள அடியார் கூட்டங்களுக்குச் சென்றாள். ஒருநாள் கிறிஸ்து பக்தர், ஒரு முனிவர் சமாதிற்குக் குருபூஜை நடத்திப் பிரார்த்தனை செய்தனர். தாயியும் அங்கே இருந்தாள். "இது யார் சமாதி" என்று கேட்டாள். "தெரியாதா எங்கள் மகாதியாகி தியோடர் முனிவர் சமாது" என்றனர். உடனே பழைய நினைப்பு வந்தது ... தன்னை அன்புடன் பேணிய தியோடர், உண்மைக் கிறிஸ்துவனான சாது தியோடர், ஏழைத் தியோடர், தியாகத்தால் பெற்ற பெருமை அவள் உள்ளத்தை அள்ளியது.

## 6. நீண்ட சிந்தனை

**மா**ளிகைக்கு வந்ததும் தாயி நீண்ட சிந்தனையில் ஆழ்ந்தாள். "சொத்திருந்தென்ன? சுகமிருந்தென்ன? கலையும் புகழும் வாலிபர் காதலும் இருந்தென்ன!

மனச்சமாதான மில்லையே! .... எனது வாழ்க்கை பாப நரகமானதே ... என்னை எனக்கே பிடிக்க வில்லையே. எனது அழகு நிலையா? இதோ கண்ணாடி எனது பூச்சிற்குள் மறைந்த வயோதிகத்தைக் காட்டுகிறதே. எனது அழகு போலியழகு, பூச்சழகு. எனது காதல் மோக மின்னல். எனது சுகம் நரகம். நான் இனிக்கும் நஞ்சு. அழகிய ராக்ஷஸி, கலையால் இளைஞர் மனத்தைக் கொலை செய்பவள். எனக்கும் உய்வுண்டோ? யார் என்னை இந்தப் பாபக்குழியி லிருந்து ஈடேற்றுவார் .... இறைவனே .... நான் ஏன் பிறந்தேன். ஏழைத் தியோடர்போலே நான் உனது அன்பே தாரகமாக வாழக்கூடாதா. ஏன் இந்தப் பாபத்தொழிலை நடத்தினேன். இறைவா என்னை ஈடேற்று ...."

## 7. போ, போ........

இவ்வாறு இரங்கிக் கண்ணீர் வடிக்கும்போது அங்கே நீஸியன் வந்தான். "அடி கண்ணுட்டி, கட்டழகி, ஏன் ஒரு மாதிரி யிருக்கிறாய் ........ வா இன்பமா யிருப்போம்" என்று அவள் தோளில் கை யைப் போட்டான். அந்தக் கையை வெட்டி யெறிவது போல் உதறித்தள்ளி "நீஸியன், நேற்று வரை நான் இருளில் வழி தெரியாமல் வாழ்ந்தேன். உன்னைப்போன்ற காமுகருக்கு உடலைக் கொடுத் தேன். சை, என்ன வாழ்வு வாழ்ந்தேன் ....... போ; இனி அந்தக்காலம் திரும்பாது ........ இந்த அசுத்த வாழ்வை விட்டு ஏசுநாதர் அன்பில் வாழத் துணிந் துள்ளேன் ........ போ போ!" என்று அழுத்தமாகச் சொன்னாள் தாயி. "அடி சிறிக்கி, என்ன, வேதாந் தம் படித்தாயோ? யாரிடம்? கனி கிடைத்தபோதே கடித்துண்ணாதவன் முட்டாள் அல்லவா? உடல் கிடைத்தது எதற்காக? நன்றாகச் சுகபோகங்களை அனுபவிக்க அல்லவா? ...... பைத்தியக்காரி வா .... சுகமா யிருப்போம்.... வா.... கண்ணே, தாயி, காதல் தேவதையே. கட்டிக்கரும்பே, பஞ்சவர்ணக்கிளியே மயிலே குயிலே .... ஒரு முத்தம் ...."

தாயி அவன் வேண்டுகோளைக் கண்டிப்பாக மறுத்து, முகத்தை மறைத்துக் கொண்டாள். நீஸியன் ஏமாந்து சென்றான். தாயி கண்ணீர் ஆறாய்ப் பெருகியது. முன்னே அலங்கார ஊற்றில் நிர்வாணப் பொம்மைகள் நிலவின. அவைகூடத் தன் வாழ்வைக் கேலிசெய்வது போலத் தோன்றின. மலர்களெல்லாம் அவளை நகையாடுவதுபோ லிருந்தன. அவள் தனது அழகும் செல்வமும் ஒரு பொய்க்கனவென உணர்ந்தாள். சில நாட்கள் தன்னிடம் வந்த காதலர்களை யெல்லாம் திருப்பி யனுப்பி வைராக்கியமாயிருந்தாள். மீண்டும் பழைய வழக்கம் அவளைப் பலர் வேட்கைக்கு ஆளாக்கியது. 'இந்த உடல் என்றும் அழியும். இளமையுள்ள மட்டும் நன்றாக அனுபவிக்க வேண்டியதை அனுபவிப்போம்' என்று சில நாட்கள் விருந்தும் விநோத கேளிக்கையுமா யிருந்தாள். ஒருநாள் அலங்கார மண்டபத்தில் அமர்ந்து தாயி கண்ணாடியில் தனது முகத்தைப் பார்த்தாள். வயதின் முத்திரை லேசாக வைக்கப் பெற்றிருந்தது. "ஐயோ நான் சீக்கிரம் இறந்து போவேனே. செய்த பாவங்களுக்கெல்லாம் நரக வேதனைப்பட வேண்டுமே.... என்னை யார் காப்பாற்றுவார்" என்று ரக்ஷகனை நோக்கி அழுதாள் ........

## 8. என்னை நம்பு

அச்சமயம் அவள்முன் ஒரு மெல்லிய உருவம் நின்றது ........ இரண்டு கண்கள் அவளைத் தீபோலப் பார்த்தன. பெண் பயந்து நடுங்கி "ஐயோ நீ யார் பேயா பிசாசா!........ எங்கே வந்தாய்? ...... பயமா யிருக்கிறதே" என்று அலறினாள் ......

உருவம் பேசத்தொடங்கியது .......

"பரமபிதாவே! இந்த மாயா வடிவம், இந்தப் பொய் அழகு, இந்த மினுக்கழகு, எனது மனதைக் கெடுக்காமல் அருள்புரியவும் ... இந்தப் பெண்ணைப் பிடித்த சைத்தானை ஓட்டியடித்து, இவள் இனி

உனக்கே காதல் கொண்டு வாழச் செய்யும் ....... ஆமன்"

யரோ பெரியவர் போலிருக்கிறதே ........ "ஐயா நீர் யார்?" என்று வினவினுள் தாயி. யார் தெரியாதா? ........ நமது சாமியார்தாம். சாமியார் வீராவேசமாகக் கிளம்பினுர் :—

சாமி : தாயீ, நாம் நைல் நதிக்கரையில் வாழும் கடுந் துறவி. உனது அழகும் கலையும் புகழ் பெற்றவை. நாம் உன்னை அறிவோம். நேரே காண விரும்பி வந்தோம்.

தாயி : ஐயோ சுவாமி இந்தப் பாழும் வேசையிடம் விருப்பம் வைக்காதீர்கள் .... எனது காதல், நெருப்பு. கண் பட்டாலே நாசந்தான் ......

சாமி : தாயீ, எமது உயிரைவிட உன்னைக் காதலிக்கிருேம் ........ உமக்காகவே வனந்தரத்தை விட்டு வந்தோம். மௌன விரதத்தையும் விட்டுப் பேசினேம். உன்னை நினைத்து நினைத்து உள்ளம் உருகினேம். கண்ணீர் பெருகினேம். நீ கண்டபேரை யெல்லாம் கூடினுய் .... அவர்கள் காதலெல்லாம் பொய், போலி, மோகக்கனவு. நமது காதல் நிலையானது. நாம் காட்டும் காதலை ஏற்ருல் நீ சுவர்க்கானந்தம் பெறுவாய் ...

தாயி : சுவாமி, நான் எல்லாக் காதல்களையும் பார்த்துப் புளித்துப்போனதே ....

சாமி : அடி, தாயி நான் தரப்போகும் காதல் என்றும் இனிக்கும் ...... நீ இதுகாறும் அனுபவித்த காதல் வெட்கங்கெட்ட மோகப்பிணி ........

தாயி : அப்படிச் சொல்லாதேயும் ......... எனக்கு வெட்க மொன்று மில்லை. நான் ஆயிரம் காதலர் வணக்கத்தைப் பெற்றிருக்கிறேன். இதோ இந்தக் காலில் எத்தனையோ செல்வந்தரும், வீரரும் விழுந்திருக்கிருர்கள். எனது

புகழை எத்தனையோ கவிகள் பாடுகிறார்கள். எத்தனையோ ஞானிகள் சுவர்க்கத்தைத் துரும்பென நினைத்து எனது இன்பத்தையே தேடிவருகிறார்கள். கவனமாகப் பேசும் ....

சாமி : பெண்ணே, நீ பேசும் மாந்தர் உனது அழகையும் இளமையையும் கசக்கிப் பிழிந்தனர். உன்னைச் சாவு துரத்தி வருகிறது. நான் தரும் காதலை ஏற்றுக்கொள். நித்திய ஜீவனம் அடைவாய். நான் பாபிநீசன். திடவைராகி. கிறிஸ்து பக்தன்.

தாயி : தங்கள் பெயரை அறிவேன். சுவாமீ என்னைப் பாபத்தினின்றும் கரையேற்றும் காதலை அளியுங்கள். இனி எனக்கு இந்த நரக வாழ்க்கை வேண்டாம்.

சாமி : இதோ, இதோ, பெண்ணே உனக்கு சுவர்க்கானந்தம் வரப்போகிறது. நீ திருந்தினாய். தாயீ, இந்தா உனக்குப் பரம சுகம் உண்டாக ஒரு சாந்த முத்தமிடுகிறேன் .... இதோ உனக்குப் பரமபிதா திருவருள் கிடைத்து விட்டது. என்னை நம்பு ...... தாயீ, இந்த உலகப்பொருள் நித்தியமில்லை. அனைத்தையும் பொசுக்கியெறி. "எல்லாம் விட்டு என்னுடன்" வா என்பதே ஆண்டவன் கட்டளை. அதைச் செய் ... அழாதே கண்ணே, உன்னை எனது குழந்தைபோலத் தூக்கிக்கொண்டு பரமபிதா திருவடியில் சேர்க்கிறேன்.

## 9. விருந்தில்

தாயி தனது பிழைகளை வருந்தி விம்மி யழுதாள். சாமியார் அன்புடன் ஆறுதல் கூறிநின்றார். இச் சமயம் ஒரு செல்வர் விருந்திற்கு அழைப்பு வந்தது. தாயி ஆடம்பரமாக ஆடையணிந்து புறப்பட்டாள். "இனி உன்னை விடமாட்டேன். நானும் வருகிறேன்" என்று சாமியார் தாசியைத் தொடர்ந்தார்.

'கோட்டா' என்ற பணக்காரன் வீட்டில் பெரிய பெரிய கனதனவான்கள் கூடியிருந்தனர். தாயி அவர்களிடையே அழகுத்தெய்வமாக வீற்றிருந்தாள். திருட்டிப்பரிகாரமாக சாமியார் அவள் பக்கத்தில் அமர்ந்து, தாடியை உருவி விட்டுக்கொண்டு மௌன மாயிருந்தார். விருந்தும், ஆட்டமும் பாட்டமும், குடியும் கூத்தும், நாத்திக வம்பும், வாய்ப்போரும், காமக் களியாட்டும் அமளிபட்டன. தாயியையும் குடிவெறியில் சில செல்வர் தழுவிக்கொஞ்சினர். சாமியார் தலையில் அடித்துக்கொண்டு, இந்தச் சைத்தான் களியாட்டம் தன்னை ஒன்றும் செய்யாதிருக்க வேண்டுமெனப் பிரார்த்தித்தார்; தாயியைச் சாராயம் குடிக்காமல் தடுத்தார். விடியுமட்டும் களியாட்டாடி வெறியர் உறங்கினர். சாமியார் தாயியை அழைத்துக் கொண்டு மாளிகைக்கு வந்தார்.

## 10. எல்லாம் போட்டுக் கொளுத்து

தாயி, எனது அருமைக் குழந்தாய், பார்த்தாயா உலகோர் கோரத்தை. வம்பு, வழக்கு, அடிதடி, குடி, கூத்து, காமலீலைகள், கொலை .... கொள்ளை ... இது தான் மாந்தர் வாழ்க்கை ... எல்லாரும் நாத்திகப் பிண்டங்கள் ... இவர்களைப் பரமபிதாதான் கேட்க வேண்டும். இப்படிப்பட்ட பாபிகளிடையே நீ இனி வாழக்கூடாது. கண்ணே உனது பாபச்சுமை பெரிது. இந்த மாளிகை, அதில் உள்ள சொத்து சுகமெல்லாம் பாபத்தால் வந்தவை. இவற்றைப் பிறருக்குக் கொடுப்பதும் பாபம். இந்த மாளிகையில் உள்ளதெல்லாம் சைத்தான் பிடித்தவை. ஆதலால் இந்தக்கூடத்தில் கட்டையடுக்கு, தீமூட்டு, அதில் எல்லாச் சாமான்களையும் நகைநட்டுக்களையும் போட்டுக் கொளுத்து ...... இப்போது நீ அணிந்த ஆடைமேல் எத்தனையோ பாபிகள் தோய்ந்து உன்னைக் கொஞ்சினர். இந்த ஆடையை அவிழ்த்து எரி. உனது அடிமைகளிடம் ஒரு ஆடை வாங்கியணி. ஏனென்றால் ஏழையெளியவரே சுவர்க்க வாசலில் புகமுடியும். ஊசிநுழை வழியாக ஒட்டகம் போனாலும்

சுவர்க்கவாசல் வழியாகப் பணக்காரன் போக முடியாது .... செல்வச் சின்னங்களை உதறி யெறி. பரம ஏழைபோலக் கந்தலணிந்து வா ... செய் நான் சொல்வதை ....

சாமியார் கட்டளைக்கு எதிரில்லை. தாயி தனது அடிமைகளுக்கு அதே கட்டளையிட்டாள். அவர்கள் பெரிய ஜதையடுக்கினர். தீ கொழுந்துவிட்டெரிந்தது. அதில் விலையுயர்ந்த சாமான்களெல்லாம் குப்பை குப்பையாக விழுந்து உருகியோடின, சாம்பலாயின. அரசிபோலிருந்த தாயி, தனது ஆடையாபரணங்களை யெல்லாம் தீயில் போட்டு, அடிமைக்காரியிடம் ஒரு கந்தலை வாங்கியணிந்து நின்றாள்.

## 11. விடாதே சாமியாரை

"மகளே, இனி நீ சுவர்க்க ராஜ்ய குமாரியானாய். பரமபிதா கருணை செய்தார். சைத்தான் ஒழிந்தான். புறப்படு ...." என்றார். இருவரும் புறப்படும்போது ஊர் திரண்டு வந்து அவர்களை வழிமறித்தது. அத்தர் புனுகு, பூ, ஜவுளி, நகை வியாபாரிகளெல்லாரும் "ஐயோ எங்கள் பிழைப்பில் மண் விழுந்ததே" என்று அழுதனர். கடைகாரர்களெல்லாரும் இனி வியாபாரம் படுத்துப்போகும் என்று வருந்தினர். கலைவாணர், "ஊர் பாழானதே ... தாயிதான் கலாவதியாக ஊரை மகிழ்வித்தாள். இனி அந்தப் பாட்டு அந்த நடனம், அந்த அழகை யாரிடம் பார்க்கப் போகிறோம்" என்று விசனித்தனர். காதலர் தாயியின் உருவத்தைக் கண்டு கண்டு நெஞ்சழிந்தனர். ஏழைகள் "மகராசி தினம் சோறுபோட்டாளே; இனி யார் எங்களுக்கு நாதி" என்று முறையிட்டனர். எல்லாரும் "அம்மா நீ போகாதே; அந்தப் பைத்தியக்காரன் பேச்சைக் கேட்காதே" என்றனர். தாயி "நண்பர்காள், நான் நரகத்திலிருந்து எழுந்தேன். இனிக் கடவுளிடம் செல்லுகிறேன், தடுக்காதீர்கள்" என்றாள். எல்லாரும் சாமியார்மேல் பாய்ந்தனர். "இந்தத் தாடிக்குரங்குதான் இவ்வளவுக்கும் காரணம். ... நாமெல்லாம் விரும்பிய அழகியை இந்த

வறட்டுச்சாமி அடித்துக் கொண்டுபோகப் பார்க்கிறன்... எறிகல் .... உடை மண்டை .... விடாதே சாமியாரை" என்று எல்லாரும் சூழ்ந்துகொண்டனர். பலமான கல்லெறி .... சாமியாருக்குக் காயம் பட்டு இரத்தம் ஒழுகியது. "பரமபிதாவே திருக்குமாரர் சிலுவையின்மேல் பாபிகளுக்காக எவ்வளவு இரத்தம் சிந்தினரோ, அவ்வளவு இரத்தம் நானும் சிந்த அருள் செய்யும். எப்படியாவது தாயியை உமது திருவடியில் சேர்க்கத் தயவு செய்யும்" என்று கண்ணை மூடித் தொழுதார். கண்ணை மூடியதும் கல்லெறி பலமானது. நல்லவேளையாக நண்பர் நீஸியன் வந்து பணம் கொடுத்துக் காலிகளை அப்புறப்படுத்தினர். "நண்பா பாபிநீசா, மீண்டும் சொல்லுகிறேன். இதெல்லாம் வீண் வேலை .... அழகுத் தெய்வம் உன்னைப் பழிவாங்கப் போகிறது பார்." என்று நீஸியன் சென்றார்.

## 12. கன்னிமடம் புகுந்தாள்

சாமியார் அதுதான் சமயம் என்று தாயியை அழைத்துக்கொண்டு சந்துபொந்தெல்லாம் சுற்றி ஊருக்கு வெளியே வந்து வெகு விரைவாக நடந்தார். வேசையின் பூவடிகள் தேய்ந்தன. இரத்தம் வந்தது. அதைக்கண்டு சாமியார் பரமானந்தப்பட்டு, "மகளே இந்த இரத்தம் மகா புனிதமானது....இந்தா உனக்குப் பரமசாந்தமாக இன்னொரு முத்தம்" என்று உதட்டுச் சன்மானம் கொடுத்தார். "தேவதூதர்காள்! இந்த மெல்லிய பூவடிகளின் இரத்தத்தைக் கொண்டுபோய் பரமபிதாவுக்குக் காட்டுங்கள்" என்று தொழுதார் .... லிபியன் வனாந்தரத்தில் சில பேரீச்சமரங்களுக்கிடையே சிறுசிறு குடில்கள் தோன்றின. அதுவே கன்னியர் மோட்சவீடு. சாமியார் தாயியை அதனுள் வணக்கமுடன் இட்டுச் சென்றார். கன்னியர் அப்போது பல வேலையில் ஈடுபட்டிருந்தனர்: சிலர் கட்டிடங்களைச் சுத்தம் செய்தனர்; சிலர் சமைத்தனர், சிலர் தோட்டவேலை செய்தனர். சிலர் நூல் நூற்றனர், சிலர் ஜபம் செய்தனர்,

தியானித்தனர். எல்லாரும் சாமியாரை வணங்கி வரவேற்று உபசரித்தனர். சாமியார் தாயியை மடத் தலைவிக்குக்காட்டி "இவள் மண்ணில் விழுந்த மலர். நான் எனது கையினால் எடுத்துக்காத்து, கடவுளின் திருவடிக்குக் கொண்டுவந்தேன். இந்தப் பெண்மணி புனிதமானாள். தனது சொத்து சுகமெல்லாம் தீக்கு இரையாக்கி வந்தாள். இவளைக் கன்னிமடத்தில் ஏற்கவேண்டும்" என்றார். தலைவி அல்பீனியா தாயியைப் பரீட்சித்து ஏற்றாள் .... தாயியின் மனம் பக்குவமாயிருந்ததால் அவளைத்தனியாக ஜபம் செய்வோர் குழுவில் சேர்த்தாள். சுவிசேஷ கீதம் பாட வேண்டியது, ஜபம் செய்து தொழவேண்டியது ... இதுவே அவள் வேலை. சாமியார் மற்றொரு வேலை கொடுத்துச் சென்றார். "தாயீ, சும்மா அழு...சிரிக்காதே ; உன் சிரிப்பு ஆடவரைக் கெடுத்தது. அந்தப் பாபம்தொலைய இதோஇந்தஅறைமூலையில் அமர்ந்து, பரமபிதாவை எண்ணியெண்ணி, பாபங்களைச் சொல்லிச் சொல்லி, அழுது கண்ணீர் வடித்தமயமாயிரு. கண்ணீரே உன் பாபத்தைக் கறைக்கும். திருக்குமாரர் வந்து உன்னை ஆட்கொள்வார்...."

இத்துடன் சாமியார் விடை பெற்றுத் தனது குடிலுக்குத் திரும்பினார்.

## 13. மனம் அடங்கவில்லை

ஆடியார்கள் மிகவும் சிறப்பாக வரவேற்றனர்; வேசையைத் திருத்திய இந்த மகான் சைத்தானையே உலகை விட்டு விரட்டியடிக்கப் போகிறார் என்று புகழ்ந்தனர். சாமியார் எல்லாச் சாமியார்களுக்கும் பரம குருவானார். ஆனால் அவரது மனநிலை மோசமாய் விட்டது. தாயி அவர் சித்தத்தைப் பிடித்துக் கொண்டாள். சதா அவள் நினைப்பு, எங்கும் அவள் உருவெளித்தோற்றம். கனவும் நனவும் இரவும் பகலும் அவளே.... முதலில் ஏசுநாதர் தாம் அங்கீகரித்த தாயியைத் தமக்கும் காட்டுவதாக எண்ணினார், ஏமாந்தார். சொல்லமுடியாத ஒரு வேதனை அவர் நெஞ்சைத் துளைத்தது. "காமத்தை வென்ற மகான்,

வேசையைத்திருத்திய விரதன், தவராஜன்" என்று பெரியார் புகழும்போது, மனச்சாட்சி "அட திருடா" என்று உள்ளிருந்து குத்திக்காட்டும். எப்படியாவது தாயி நினைப்பு மாறவேண்டுமென்று சாமியார் கடுமையான விரதமிருந்தார். தமது குடிலை அடைத்துக் கொண்டு "ஏசுநாதரே, உமக்காகத்தானே அவளை இப்படி மாற்றினேன். அவள் என் சித்தத்தைக் கலைக்க விடலாமா? கருத்தரே அவளை என் மனத்திலிருந்து விரட்டியடியும்" என்று குப்புறப்படுத்து அழுதார். அமைதிவரவில்லை. மனப்பேய் அடங்கவில்லை. தமது குடிசையில் சைத்தான் புகுந்து கொண்டுதான் இப்படிக் கெட்ட எண்ணத்தை உண்டுபண்ணுகிறுன் என்று சாமியார் ஓட்டமெடுத்தார்.

## 14. பேயின் நோய்

ஓர் இடத்தில் ஒரு பாழும் கோயில் இருந்தது. அதன் முன்பு ஒரு நீண்ட கல்தூண் இருந்தது. சாமியார் அதன்மேல் ஏறி, விறைப்பாக அமர்ந்து, நிஷ்டையில் லயித்துப்போனுர்; அப்படியே உயிர் விட்டுவிடுவதாகத் தீர்மானித்தார். ஆனுல் காரியம் வேறு விதமாக முடிந்தது. பக்க ஊர்களில் உள்ள ஜனங்களெல்லாம், சாமியாரைத் தெய்வமாகக் கொண்டாடினர். கம்பத்திற்கு மேலே பந்தல் போட்டனர். ஏணி வைத்து உணவனுப்பினர். நாட்டிலுள்ள அன்பர், அறிஞர் எல்லாரும் கம்பச்சாமியைக் கண்டு வணங்கினர், வரங்கேட்டனர். காணிக்கை போட்டனர். சாமியார் கம்பத்தைச் சுற்றி ஒரு பெரிய ஊரே உண்டானது. சாமியார் திருவடி நிழலில் வசிப்பதே முத்தி யென்று பலர் அங்கே வீடு கட்டிக் குடியேறினர். கடைகண்ணிகள் ஏராளமாக வந்தன, நல்ல வியாபாரம் நடந்தது. நோயாளர் கும்பல் கும்பலாக வந்தனர். சிலருக்கு நோயும் தீர்ந்தது. பெரியபெரிய பிஷப்புகளெல்லாம் சாமியார் கம்பத்திற்கு வணக்கம் செலுத்தினர். கவிகள் சாமியார் மகான்மியத்தைப் பாடினர்.

"தெய்வமே எங்களைக் கரையேற்ற வேண்டும்" என்று வேண்டினர் பலர்.

சாமியார் மட்டும் இவற்றில் மகிழவில்லை. அவர் முகத்தில் விசனமே அதிகரித்தது. அதுவே அகத்தின் அழகு. அவர் மனத்தைக் காமப் பாம்பு சுற்றிக்கொண்டது. சுற்றியுள்ள ஜனங்களெல்லாரும் "சாமி சாமி" என்று முறையிட்டனர். அவர் மனம் "அட காமி காமி, களவாணி" என்று சவுக்கடி கொடுத்தது. தாயிப் பைத்தியம் வட்டி போட்டு வளர்ந்தது. அழகுத் தெய்வம் அவரது அமைதியைப் பழி வாங்கியது. ஐயா, நான் சாமியல்லேன், என் மனத்தில் கடவுள் இல்லை .... அதில் எத்தனையோ கல்மிஷங்கள் புகுந்திருக்கின்றன. நான் உள்ளே நரக வேதனைப்படுகிறேன் .... என்று சாமியார் வெளிப்படையாகச் சொல்லியும் ஜனங்கள் அவரை வணங்கினர். இதனால் காமத்துடன் 'தான்' என்னும் செருக்கும் சேர்ந்து, அவரை வருத்தின. அங்கே இருக்கவே பிடிக்கவில்லை. ஒருநாள் இரவில் ஏணிவழியாக இறங்கி, சாமியார் ஓட்டமெடுத்தார். அவர் அந்தர்தானமாய்விட்டாரெனப் பேதை மக்கள் வருந்தினர்.

## 15. காமியார்

சாமியார் எங்கே போனார்? ஊர் ஊராகச் சுற்றி முடிவில் ஒரு சுடுகாட்டில் ஒரு கல்லறைமேல் படுத்து அழத்தொடங்கினார். "ஏசுநாதரே ஏன் என்னைக் கைவிட்டீர். உமக்காகத்தானே அவளை மாற்றினேன். என்னை அவள் வடிவம் இப்படி எங்கும் தொல்லைசெய்வதேன் ...? கருத்தரே அருள் விழி பாரும்." என்று நாளெல்லாம் வேண்டினார். இரவில் அந்தச் சுடுகாட்டுப் பேய்களெல்லாம் எழுந்து சாமியாரைத் தொல்லை செய்தன. இளம் பெண் வடிவங்கொண்டு ஒரு பேய் சாமியாரைப் பலாத்காரம் செய்தது. காமப்பித்தம் தலைக்கேறிவிட்டது. "சாமியாவது பூதமாவது .... எல்லாம் தாயிதான்.

அவளே உண்மை, அவளே இன்பம் .... தாயி, தாயி, நீ என் வசம் இருந்தபோதே உன் வசமாகாது போனேனே. இனியும் உன்னை அடைவேனோ? தாயி, தாயி என்னுடன் வா ... நீயே என் கதிமோட்சம். உனது சுகமே பேரின்பம்.'' என்று சாமியார் வாய் விட்டுப் புலம்பினார் .... பின்னாலிருந்த சாத்தான் முன்னால் வந்து வெற்றிமுழக்கிச் சிரித்தான்.

காலையில் ஒரு விசேஷம். முதிய தபோதனர் அந்தோணி முனிவர் பரமபதம் அடையப்போகிறார். சாதுக்கள் பலர் அவர் ஆவியை வணங்கக் கூடியிருக்கிறார்கள். நமது சாமியாரும் வந்து அந்தோணி முனிவரை வணங்கினார். இவரைக் கண்டதும் முனிவர் முகஞ்சுளித்தார். அவருக்கு "பால்'' என்ற ஒரு சீடன் இருந்தான். அவனை ஃபூல் (முட்டாள்) என்றே அழைப்பர்; பரமார்த்தம்; உலகமே தெரியாது. முனிவர் பாலைத் தன் பக்கத்தில் அழைத்து "நீ குழந்தையானாய்; கடவுள் கருணை உனக்குக் கிடைத்து விட்டது. தம்பீ, இப்போது நடக்கும் ஒரு தீர்க்க தரிசனத்தைச் சொல். மகனே, இப்போது சுவர்க்கத்தில் என்ன நடக்கிறது; உலகில் என்ன நடக்கிறது; சொல்'' என்றார். பால் சில செய்திகள் சொல்லி, முடிவில் "பரமபக்தையான தாயி சாகக்கிடக்கிறாள். அவளை வரவேற்கத் தேவலோகத்தில் அரியணை தயாராகிறது. அதே இடத்தில் ஒரு புகழ்பெற்ற சாமியாரைக் காமம், செருக்கு, சந்தேகம் ஆகிய மூன்று பேய்கள் பிடித்துக் கொள்ளப்போகின்றன. ஒரு வேசை சுவர்க்கத்திற்குப் போகிறாள். ஒரு சாமியார் நரகத்திற்குப் போகிறார்'' என்றான். "அந்தோணி முனிவருக்குச் சிறப்புகள் நடந்தன. ஆனால் நமது சாமியார் நினைப்பு அங்கேயில்லை; 'தாயி சாகக்கிடக்கிறாள்' என்றதைக் கேட்டதும் ... "அடியென் கண்ணே நீயின்றி எப்படி வாழ்வேன்!'' என்று அழுது கன்னிமடத்திற்கு ஓடினார்.

# 16. தாயி மோட்சம்

"வரவேண்டும் மகான் மகான்" என்று பரிசுத்தக்கன்னியர் சாமியாரை வரவேற்று வணங்கினர். சாமியார் தாயியைப் பார்க்க முந்தினூர். தாயி பூர்வ வாசனைகளை யெல்லாம் மறந்தாள். சிற்றின்பத்தை வெற்றின்ப மெமன உதறித் தள்ளினாள். ஏகாந்தமாக அமர்ந்து, இறைவனை ஜபத்தாலும் தியானத்தாலும் வழிபட்டாள். தனது பாபங்களை நினைத்து மன்னிப்புக் கேட்டாள். ஒரு புல்லாங்குழலால் தேவகானங்கள் செய்தாள். அவளால் அந்த மடத்திற்கே ஒரு சோபை யேற்பட்டது. தன்னை இந்தப் பேரின்ப நிலையில் உய்த்த சாமியாரை அவள் பரிசுத்தமான நன்றியுடன் நினைத்தாள். கடுமையான விரதங்களால் அவள் உடல் படுத்தது. நோய் முதிர்ந்தது. இதோ உலகினின்றும் தாயி விடை பெற்றுக் கொள்கிறாள். கன்னிமார்களெல்லாரும் அவளைச் சுற்றியமர்ந்து, சுவிஷே கீதம் பாடினர். அச்சமயம் சாமியார் "தாயி நீ வாழ்க .... கண்ணே வா, என்னுடன் ...." என்று கையைப்பிடித்தார். தாயி "ஆ! குருநாதா, வருக; என் மனத்தில் நித்தியக் காதலைப் பாய்ச்சிய மகானே வருக ... என்னைக் கடவுள் தங்கள் வடிவாகக் காத்தார். இப்போது அவர் என்னை சுவர்க்கத்திற்கு அழைத்தார் ..." என்றாள்; கடவுளைத் தியானித்தாள். சாமியார் என்ன செய்தார் .... "அடி யென்கண்ணே, கடவுள் நீதான். உனது மார்பே சுவர்க்கம்" என்று தாயியைத்தழுவிக் கொண்டார். அடபேயே, பேயே போ...போ என்று கன்னியர் கூச்சலிட்டு சாமியாரை விரட்டியடித்தனர். தாயி ஆவி சுவர்க்கம் சென்றது; சாமியார் மனம் காம நரகத்தில் விழுந்து வருந்தியது.!



